உ
சிவமயம்.

சத்தியதரிசி நூல் வெளியீடு மலர் 2.

# இகபர இன்ப அனுபவ ஞானம்

**இது கடவுள், உயிர், உலகம் என்ற முப்பொருள் உண்மை உணர்த்தும்.**






சத்தயத்ரிசி காரியாலயத்து
அதிபதி ஆசிரியரும்,
திருமூல ஆஸ்ரமத்தின் அதிபருமான

உயர்திரு, ந. சுவாமிநாதமூர்த்தி அவர்களால்

இயற்றப்பட்டு
திருமூலர் ஆசிரமவாயிலாக
வெளியிடப்பட்டது.



திருமூலர் ஆசிரமம்
திருப்பரங்குன்றம்,
மதுரை.

உ

சிவமயம்

# இது, கடவுள் - உயிர் - உலகம் - என்னும் முப்பொருள்

# உண்மையை உணர்த்தும்

## முன்னுரை.

புண்ணிய பூமியாம் இப் பூவுலகம் இன்று சீர் குலைந்து செருக்குற்றுத் தடுமாறி நிற்கின்றது.

இது செழிப்புற்று முன்னேற வேண்டும். எங்கெங்கு பார்க்கினும் கட்சிப் பிணக்கும், வறுமைத் தொல்லையும், சமயப் பூசலும், சாத்திரச் சந்தடியும் ஓங்கி வளர்கின்றன. கலை உரைத்த கற்பனையே நிலையெனக் கொண்டாடும் கண்மூடி வழக்கம் எலாம் மண்மூடிப்போக வழிகாட்ட வல்ல உயர்ந்தோர் நெறியில்தான் உலகம் செழிக்க இயலும். உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே. நிகழ்ச்சி அவர் கண் ஆகலான், என்ற ஒல்காப் புகழ் தொல்காப்பியர் ஆணையின் வழி நின்ருல் உலகம் செழிக்கும்.

உயர்ந்தோரைத் தேடி நாடிக் கண்டு தெளியாமல், கண்மூடித்தனத்தால் இன்றைய உலகம் மண்மூடிக் கிடக்கின்ற பாலை வனமாய்விட்டது. இதில் சோலை வளர்க்க வல்லவர்களும் இன்று இல்லாமல் போகவில்லை. அப்படியாளுல் அவர்கள் ஏன் வெளிவரவில்லை? ஏன் இந்த அலங்கோல நிலையை மாற்றி உலகத்தைக் காப்

பாற்றவில்லை என்ற ஐய வினாக்கள் எழலாம். இருண்டு கிடக்கும் இந்த உலகத்தின் இன்றைய நிலையில் என்ன நடக்கின்றது என்று சிறிது சிந்தனை செய்து பார்த்தால் உண்மை விளங்கிவிடும். எப்போது உலகத்தைக் காப்பாற்றுவது - எப்படிக் காப்பாற்றுவது என்று அவர்களுக்குத் தெரியாமலில்லை.

"காலங்கருதி இருப்பர்; கலங்காது ஞாலங் கருதுபவர்"

என்ற வள்ளுவர் வாக்குப்படி அவர்கள் அருள் செயல் நடைபெறும்.

"நடக்கில் நடக்கும்; நடக்கும் அளவே"

என்றவாறு நடைபெற்றேதான் வருகின்றது. மேகம் பெய் என்று யாராவது கட்டளையிட்டா பெய்கின்றது; அல்லது ஏதாவது உதவி நாடிப் பெய்கின்றதா? மேகம் போல பெரியோர் அருள்மழை பொழிந்து உலகத்தை வாழ்விக்க வருவது இயல்பு. அம் மழையைப் பயன் படுத்திக்கொள்ளும் பண்பு மக்களுக்கு அமையவேண்டும். மழை பெய்தால் பெய்துவிட்டுப் போகிறது என்று ஏரும் கலப்பையையும் ஏரிட்டுப்பாராமல் வீழ்ந்து கிடக்கு மாப் போன்ற தாழ்ந்த நிலையில் உள்ளவர்கள் உயர வேண்டாமா? உயர் நெறியே இன்னது என்று அறியாமல் கிடக்கின்றனர்.

அழி நிலை மறைந்துபோக அருள் பொழி நிலை உலகத்தையே இன்பம் பொழியும் பொழிலாக மாற்றி அமைத்துவிடாதா? ஆனால், தாகம் இல்லாதவன் தண்ணீரை மதிப்பானா? அதேபோல் உலகினர் இன்று பெரியோர் யார்? முப்பொருள் உணர்ந்த உயர்ந்தோர் யார்? என்றே அறிந்துகொள்ள வழி தெரியாமல் காடு மலைகளில் சலித்து காய், கனி, இலை, சருகு முதலியன புசித்து நெடும் தவம் புரிந்து உடலைக் கடைந்து உயிரை

ஒறுக்கி யுழன்றும் நாடு நகர்களில் தேடி அலைந்து கூரையும் சோறுமே கண்டுமுதலாக்கி கொண்டாடிக் கொம்மட்ட மடித்து திரிந்து முழுமுதலாம் முதல்வனைக் காணும் முழு மனிதனைப் பார்க்கவே முடியாத நிலையில் விழுமிய பொருளை வெறுக்கின்றனர்.

இந்த நிலை மாற, சொந்த நிலை வந்தாகவேண்டும். ஆனால் மேனாட்டறிஞர் சிலர் கூறுவதுபோல் சூப்பர் மென் (Supermen) வந்து காப்பர் கொலோ என்று வாய்ப் பறை அறைந்து மாள்வதில் பயனில்லை.

"ஆளாகார் ஆளானாரைக் கண்டு உய்யார்"

என்ற அப்பர் ஆணைவழி நிற்க உண்மை புலனாகிவிடும். உலகம் உடல் உயிர் செழிக்கும் செல்வ நிலைதான். கடவுள் என்பார் சொல்லும் சொல்லின் பொருளும் உய்த்து உணர்ந்து கண்டு தெளிதலே கருணை நிலை யாகும். இதனை முறையாக விளக்கி முழு மனிதனாக்கி முழு வாழ்வு வாழும் வழி காட்டுவதே இந்த வெளியீட் டின் குறிக்கோளும், நோக்கமுமாகும். கடவுள் என்பதின் கருத்தும் உயிர் மலரும் உயர் நெறியும் உலகம் வளம் பெறும் உண்மை வழியும் காட்டவே இவ் வெளியீடும். இதனைத் தொடர்ந்து வெளிவரும் மற்ற வெளியீடுகளு மாகும். கருத்துடன் இவற்றை ஓதி உணர்ந்து உய்யின் உலகம் செழிக்கும் என்பதில் எத்துணையும் ஐயமில்லை.



# 2. கடவுள்

கடவுள் என்ருல் என்ன? எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே என்பர் - தொல்காப்பியர். பெயர் இருந்தால் அது குறிக்கும் பொருள் ஒன்று இருந் தாகவேண்டும். உலகம் என்பதே நாம ரூபங்களால் உணரப்படுவதுதானே. நாமம் இருந்தால் ரூபம் இருந்து தானே யாகவேண்டும். இதனையே

"உரை யளவை"

என்று அளவை நூலார் கூறுவர். ஊனங் கடந்த உணர்வோடு கானங்கடந்த கடவுளைக்கண்டுள்ளோர்தான் உயர்ந்தோர். அவர்களால்தான் உலகத்தை நேர்வழியில் நடத்த இயலும். கடவுள் என்ற சொல் எதைக்குறிக் கின்றது? அதனை நாம் உணர்வது எப்படி? கடவுள் என்ற சொல்கட- உள், என்ற இரண்டு சொற்களால் அமைந்தது.

என்வே, அது மேற்கண்ட இரண்டு கேள்விகளுக் கும் விளக்கமான பதிலை தன்னுள் அடக்கிக்கொண் டிருக்கின்றது. சிலர் அதனைப்பற்றியே எதுவும் அறிய முடியாது என்று அச்சுறுத்தி விலகிவிடுவர். அது மனோ வாக்குக்காயங்களுக்கு அப்பாற்பட்டது. கடந்தது அதைப்பற்றி, எதுவும் சொல்வதற்கு இல்லை. என்று சுருக்கமாகக் கூறி விலகிவிடுவர். (கடவுள் என்பதற்கு அது பொருளாஞல்)

"முகத்தில் கண் கொண்டு காண்கின்ற மூடர்காள்
அகத்தில் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்."

உள்ளுயிர்ப்பாய் உடலாய் நின்ருர் நந்தி
வெள்ளுயி ராகும் வெளியான் இலங்கொளி

உள்ளுயிராம் உணர்வே உடலுட் பறந்து
அள்ளுயிர் ஆவனம் தாங்கி நின்றானே.

என்று உயர்ந்தோர் துணிந்த துணிவுதான் எதன்பால் படுவது, காட்சி, கருத்து, உரையளவைகளால் துணிந்தாலன்றி உண்மை நிலைபெற வழி ஏது? எனவே உள்ளத்தில் ஊன்றி நின்று உணரும் செம்பொருள் தான் முழுப்பொருள். அதனை அகத்திலோ, புறத்திலோ அடைத்து வைத்துவிட முடியாது. வெளிப் பிணக்குகளில் சிக்கிக்கெட்டுவிடாமல் உலகநிலை உணர, உள்ளந் தெளிய, உடலுயிர் உய்யும் உணர்வில் ஊன்றி நின்று பெறும் உயர் இன்பம் கடவுள் எனப்பட்ட பொருள்.

போலிப் புலவர்களின் ஆரவாரக் கல்வி வரிசைகள் எல்லாம் செல்லாத இடம் கடவுள் என்ற சொல்தான். இதனைப் பலபடப் புனைந்து ஒதுக்கிவிட்டு அவர்கள் மனம்போலப் பிதற்றித்திரிய முனைவதன் கருத்தே அவர்கள் அறிவுக்கு எட்டாத நிலையில் அச்சொல் அமைப்பு இருப்பதுதான். இதனை ஓரளவு தெளிவுபடுத்தி மேல்செல்வதுதான் சமயங்கள் போற்றிவரும் சமயங்கடந்த மோனத்தின் வைப்பும் வரிசையுமாகும். சடங்குகளின் உட்கிடக்கையும் உடலுயிர்கள் தேடி நாடி அடைதற்குரிய அனுபவமும். அதுவே உலகம் உயிரிலும் உயிர் கடவுளிலும் ஒன்றி உயருவதே செந்நெறி. திருமந்திரம் ஓதுமுறை ஓதியறிந்தும் ஓதாது உணருமுறை உணர்ந்து கண்டு உயர்ந்தார்களுள் திருவள்ளுவர் ஒருவர் ஆவர். அவர் நூலுக்கு உரை எழுதியோர் பலர் கருவி நூல் மட்டும்தான் கற்றவராவர்

"இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ் புரிந்தார் மாட்டு"

என்றபடி வினையில் நீங்கி விளங்கிய அறிவின் முனை வதே நூல் உணர்ந்த மறையவர் மாண்பு அதனை விளக்குதற்குரியதாம்.

"உரையற்ற தொன்மை உரைத்தான் எனக்கு
கரையற்று எழுந்த கலை வேட்டத்து,,

"புலை நின்ற பொல்லாப் பிறவி கடந்து
கலை வென்ற கள்வனைக் கண்டு கொண்டேனே"

"கள்ளப் பெருமக்கள் காண்பர் கொலோவென்று
உள்ளத்தி னுள்ளே ஒளித்திருந்தானே"

"திடம் வைத்த தாமரைச் சென்னியில் அங்கிக்
கடைவைத்த ஈசனைக் கை கலந்தேனே"

"இல்லை எனினும் பெரிதுளன் எம்மிறை
கல்லது நெஞ்சம் பிளந்திடும் காட்சியன்"

நீருண்டு நெருப்புண்டு வாய்வு மருண்டு அருக்கனும் சோமனும் அங்கே அமரும் திருத்தக்க மாலும் திசை முத்தி தானும் உருத்திரச் சோதியும் உள்ளத் துளார்க்கே என்று இன்னோரன்ன. பல பிற அருள் மொழிகள் இனிது விளக்கும். அதனால் கடவுள் பொருள் விரிக்கும்; வீடு சிந்தையும் மன்மும் செல்லா நிலைமைத் தாதலின் அதனைவிட்டு நூல் எழுதினார் வள்ளுவர் என வரையத் துணிந்து கூறினர். அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கையும் அகம் புறம் என்ற இரண்டே பகுதியுள் அடக்கிக் கூறும் தமிழ் மரபு. ஆதலால் உணர்ந்து கண்டு உரைப்பதே நூலுக்கு உரை எழுதுவது

"பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றை,
பற்றுக பற்று விடற்கு"

"மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடு வாழ்வார்".

செல்வத்துட் செல்வம் அருட் செல்வம் பொருட் செல்வம் பூரியார் கண்ணுமுள என்று வள்ளுவர் கூறுவதையும்.

"பொருளற்றார் பூப்பர் ஒருகால் அருளற்றார்
அற்றார் மற்று ஆதல் அரிது.

"சிறியார் உணர்ச்சியுள் இல்லை பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்"

என்ற அவர் ஆணையும் உணராதவர் தமிழறிஞர் ஆவது எவ்வாறு? இப்படியே செய்யுள் விக்குள் முதலிய சொற்களைக் காட்டி உள் என்பதின் பொருள் அவற்றில் அமைந்திருக்கும் உண்மையையும் உணரா மல் வெறும் விகுதியாக்கிவிடுவது ஒரு சாரார் சொற்படி வித்தையாகும்.

கட - உள் கடவுள் என்றாகியதின் கருத்தும் பொரு ளும் முழுநோக்கமும் திருமூலப் பெருந்தகையின் திரு மறையில் கண்டு தெளியலாம். (உள்ளம் பெரும் கோயில் ஊனுடம்பு ஆலயம் காயம் என நாட்டினில் கண்டு கொண்டேனே)

வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லுவன்
ஊன் பற்றி நின்ற உணர்வுறும் மந்திரம்
தான்பற்றப் பற்றத் தலைப்படும் தானே

என்று அவர் கூறிய குறிப்புக்களைச் சேர்த்து உணர வல்லவரே பெருநெறியாம் மோனத்தின் இயல்பறி வாராவர்.

"முகத்தில் கண்கொண்டு காண்கின்ற மூடர்களை உய்விக்க, அகத்தில் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்" என உணர்ந்து உணர்த்தும் ஆற்றல் படைத்த பெரி யோர் புறக் கவர்ச்சியில் உள்ளம் பறிபோகாமல் பேணி வளர்க்க வல்லவர்களுக்கு எல்லாம் தெரியும். கொல்லும்

நெறியைவிட்டு வெல்லும் நெறியில் உலகத்தை நடத்த அவர்களே அருகதை உடையவர்கள்.

கடவுள், உயிர், உலகம் என்ற இவற்றை அவர்கள் விளக்கும் முறையில் ஒன்றி நின்று உணர முயல்வோம். அனைத்தும் இங்கே விரித்துரைத்து விளக்கிவிட இயலாதாதலின் இதனைச் சுருங்கச் சொல்லி விளங்கவைத்தல் என்ற முறையைப் பின்பற்ற நேர்ந்தது. இருளைக் கடந்து அருளை விளக்கும் உள்ளத்தில் ஊறும் தேனாறு தான் கடவுள். மெய்யருள் அன்பிடை ஊறிக் கிடக்கும் இன்பவெள்ளத்தில் மிதந்து கிடப்பவனே நாராயணனும் சற்குருநாதன் ஆற்றைக் கண்டானா, அழகரைச் சேவித்தானா? என்ற நாடோடித் தமிழ் முதுமொழியும்.

"பேரின்பம் பெருக்கும் பெருந்துறையில் மேய
[பெருங்கருணையாளன்
பாரினில் வெள்ளம் பெருகப் பரிமேல் வந்த பிரான்"

என்று உயர் தமிழர் வழங்கிவரும் வாக்கியங்களும் அவற்றின் உட்கிடக்கையும் இதுவேயாகும்.

அணுவிடை நின்ற இருளையகற்ற அணுவைத் துருவி, கணு முற்றி நின்ற கரும்பாகக் கடவுளைக் காண்பதே உடலுயிர்கள் அடையும் பெரும்பேறு, உய்யுவைப்பர் உயர்ந்தோர். உயிர் உலகம் என்ற இரண்டின் ஒருமையில் கடவுள் பற்றிய பல கருத்துக்களும் இனிது விளங்கும்.



# 3. உயிர்

உலகத்துக்கும் உயிர் உண்டு. இதை உயர்ந்தோர் உயிர்கள் என்ற ஆகுபெயர்களில் சொல்லவில்லை. மரத்துக்கும் உலோகப் பொருள்களுக்கும் உயிர் உண்டு. இதையே நுண் மாண் நுழை புலம் உடைய அறிஞர் விளக்குகின்றனர்.

மாணிக்கவாசகர் கூறுவது நோக்கத்தக்கது.

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிக்
கல்லாகி மனிதராகும்......................

விந்தை. மணிவாசகரைப் போன்றோரால்தான் இனிது உணர்ந்து விளக்க முடியும்.

"பூதங்கள் ஒத்தும் புதுமைதான் விந்தை எனில்
நாதங்கள் ஒத்து நயந்தருதற் கொப்பாமோ"

என்று புலவர்கள் வியந்து நயந்து பாராட்டிக் கூறும் பண்புடையவர்களே உயர்ந்தோர். அவர்கள் உணர்த்தும் உயிர் நூல் வேறு.

தற்கால அறிவியலார் கூறும் உயிர் நூல் வேறு தான். முப்பொருள் உணரார் சொற்படி வித்தைகளில்தான் இன்றைய உலகம் சிக்கித் திணறுகின்றது. இதனை விடுவிக்க உண்மையான உயிர் நூல் உணர்வு இன்றியமையாதது. உயிர் எத்தன்மையுடையது. உணர்தல் தன்மையுடையது என்றுதான் பதில் கூற வேண்டும். ஆதலின் உணர்வின் பெருமையான் கடவுள் என சைவ - வைஷ்ணவ முதலிய திருமுறைகளில் எல்லாம் பாராட்டப்படுகின்றது.

ஊனும் உயிரும் உணர்வும்போல்
உள்ளும் புறமும் உளன் என்ப

என்று கம்பர் கூறுவர். "உள்ளத்துள்ளே தான் சுரந்து எங்கும் நின்றவன், வள்ளல் தலைவன் மலர் உறை மாதவன்" என்று திருமந்திரம் கூறும். தேவர்களும் மானிடராகி ஊனுடம்புடன் வந்தே உயர்வர் என்பதின் உட்கருத்து இது,

"உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினின் உள்ளே உறுபொருள் கண்டேன்"

என்றும்,

"உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவு மாட்டார்"

மலமென் றுடம்பை மதியாத ஊமர்
தலமொன்று வேறுதனித்தமை கண்டிர்
நலமென் றிதனையே நாடி யிருக்கில்
பலமுள்ள காயத்தில் பற்றும் இவ்வண்டத்தே.

என்றும் திருமூலர் முழக்கமிட்டதும் காண்க.

"மாசற்ற கொள்கை மனதில் அடைந்தக்கால்
ஈசனைக் காட்டும் உடம்பு"

என்று ஔவையார் எடுத்துக்கூறிய குறிப்பதுவும் இங்கே ஆய்ந்து அறிந்து போற்றத்தக்கது.

உய்யும் வகையால் உணர்வினால் ஏத்துமின்
ஐயன் அறநெறி

ஊறும்! உயிர்ப் பொருள்கள் அனைத்தும் தேறும் பொருள்களாக்க உணர்வு மயமாக உயரவேணும் என்றுள்ளபடி "உண்டென்று திண்ணென உள்ளே உருகி உணர்வை உணர்ந்தபின் தேனை அனையன் நம தேவர் பிரானை" அஃதின்றேல் நிலையியல் பொருள்களே இயங்கியல் பொருள்களில் கூட உணர்வற்றவை உயிர்களல்ல என்பர். இந்த உண்மை மூர்த்தி தலம் தீர்த்தம்

என்றும் உய்யும் வழியில் உணர்வு தலைப்படில் தெய்வ உணர்வு கைவரப்பெறலாம். இன்றேல், இல்லை. உணர்ந்து உணர்ந்து உருகி, உருகி, உயரும் பெருநிலை உயிர் நிலையாகும். அஃதின்றேல் அண்ட பிண்ட அணுமய உணர்வற அழிவே முடிவாகும். காயசித்தி என்பது மந்திர தந்திர அவுஷதங்களாலும் பெறுதல் கூடும். வெறும் சித்திகளில் சிக்கி நிற்பது அறிவுள்ளோர் செயலாகாது. அவற்றையே நொடிகளாக்கிக் கொண்டு தடுமாறிக் கருவத்துடன் அழிந்து விடக்கூடாது. அப்படிச் சருங்கி விழுவது உயிர்ப்பண்பாகாது. இங்கே அது ஞான நிலையைக் குறிப்பதில்லை.

"எண்ணாயிரத் தாண்டு யோகமிருப்பினும்
கண்ணா ரமுதனைக் கண்டறி வாரில்லை"

என்று திருமந்திரம் கூறும. சனன்-சனகர் முதலியோர் சித்திகள் படித்தனரோ? சித்திகள் விசித்திரம் தருமேயல்லாமல் முத்தியைத் தாராவே என்று கைவல்ய நவநீதமும் எடுத்துக்காட்டும். ஞான நிலையில் சித்திகள் பல தான்வந்துறும். அவை விரும்பி வந்தனவல்ல. ஆறு கோடி மாயாசக்திகள் வந்துழி வந்துழி மறுத்தனர். அங்கே என்று திருவாசகத்தினும் கூறப்பட்டுள்ளது.

உயிர் என்றால் வெறும் உயிர்ப்பு மட்டும் என எண்ணி மயங்கி அழிந்தவர் எண்ணிலர். உயிர்க்கலை பிராணயாம வித்தையை விரிவாக்கி தாயோடு கண்மூடித் தனையறிய முயலாது வரயோடு கண் மூடி மயக்கமுற்றுத் தவித்துத் தளர்ந்து தடுமாறி மாண்டவர்கள் கணக்கில் அடங்கார். இத்தகைய பல்வேறு நிலைகள் எல்லாம் பொய்யினில் மெய்யினை மெய் என உணர அறியாமையாலேதான் உண்டாகின்றன. அறியாமையும் முன்னோர் விளக்கி அருளிய உடம்போடு உயிரிடை நட்பாம் வழியை

பொன்னை போல் போற்றத் தெரியாப் புன்மையால் வருவதேயாம்.

ஐந்தும் அடக்கு அடக்கு என்பார் அறிவிலார்
ஐந்தும் அடக்கும் அமரரும் அங்கில்லை
ஐந்து மடக்கில் அசேதனமா மென்றதும்
ஐந்துமடக்கா அறிவறிந் தேனே

என்பதாலும்,

"விடக்கிரண்டுன் புறமேற்று சிந்தை
நடக்கில் நடக்கும் நடக்கும் அளவே"

என்றதாலும், வெறும் புலனடக்கம் போலி என்பதே தேற்றமாம். அறிவு தெளிய உலகம் உணர்வுள் ஒடுங்க உயர் புலன் திறக்க வழிதேடவேண்டும். உயிர் அதனைத் தேடி அடைந்தே தீரும். ஞானசம்பந்தர் கூறியபடி

திருவே என் செல்வமே தேனே வானோர்
செழுஞ் சுடரே செழுஞ்சுடர் நற்சோதிமிக்க
உருவே என் உறவே என் ஊனே ஊனின்
உள்ளமே உள்ளத்தி னுள்ளே நின்ற
கருவே என் கற்பகமே கண்ணே கண்ணிற்
கருமணியே மணியாடு பாவாய் காவாய்
அருவாய வல்வினைநோய் அடையா வண்ணம்
ஆவடு தண்துறை யுறையும் அமரரேறே

ஊனில் உயிர்ப்பை ஒடுக்கி ஒண்சுடர் ஞான விளக்கினை ஏற்றி ஐம்புலத்தேனை வழிதிறந்தேத்தற்கு வழிகாண வேண்டும். வினையறிவும் செல்வமும் தெளிவான அருட்கண் கொண்டு ஆண்டவனைக் காண இடையூறுகும். ஆனல், அனைத்தும் துறந்து வெறும் ஆண்டிகளாகி பிச்சை புகுதலிலும் இல்லை. ஏன் எனின் செல்வமும் கல்வியும் தெளிவு தரப் போதுமான அளவு தேவை

யேயாம். ஆனல் அதுவும் உணவைப்போல மிகினும் குறையினும் நோய் செய்ய வல்லது.

"கறையற்று எழுந்த கலை வேட்டறுத்து
திரையொத்த என்னுடல் நீங்காதிருத்தி
உரையற்ற தொன்றை உணரத்தான் எனக்கு"

என்று மகிழ்வர். திருமூலர் அதனை,

"உரையற்ற தொன்றை உரைசெய்யும் மூடர்காள்
கரையற்ற தொன்றைக் கரைகாண லாகுமோ"

என்ற அவர் விழைவுடன் சேர்த்து உணரத் தவறின் உயிர் நூல் உண்மை உணர இயலாது.

"திரையற்ற நீர்போல் சிந்தை தெளிவார்க்கு
புரையற் றிருந்தான் புரிசடை யோனே"



# 4. உலகம்

உலகம் என்பதே உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியது. அவ்வளவும் உலகம் என்பதன் உள் பொருளாகவே அறிவியலார் கூறுவர். உலகெலாம் ஆனாய் நீயே என்பதும் இங்கே உணர்தற்பாலதே. அண்டம் அழகியது. அது போல் பிண்டமும் அழகியதுதான். நாற்ற உடம்பு என்று தூற்றித் திரிவதால் பயனில்லை.

"கண்டங்கரியதாய் கண்மூன் றுடையதாய்
அண்டத்தைப் போல அழகியதாய்—தொண்டர்
உடலுருகத் தித்திக்கும் தீங்கரும்பாகவே"

கடவுளை ஆன்றோர் கூறுவது நோக்கி மகிழத் தக்கது. கடவுளையே அண்டத்தைப் போல் அழகியவர் எனக் கூறுவதில் எவ்வளவு உண்மை பொதிந்துள்ளது என நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து உள்ளம் தெளிந்து உயரத்தக்கது. (தேவே மனுஷ்ரூபே) என்பது வேதவாக்கியம் என்ப. மானிடயாக்கை வடிவு சதாசிவம் என்ப. தமிழர் திருமறை, இதனை உணரார் வெறும் மனித ஏழையர். முழு மனிதராகி முழு முதலாம் உள்ளத்தினுள்ளானை உள்கி அறிய முயலவும் மாட்டார் முயல வல்லாரையும் பெற்றிருந்தாரையும் பேணார். போற்றித் தாம் தேறவு மாட்டார்.

இம்மானிட வடிவமே தேவ வடிவென்றும் இவ்வடிவினைத் தேவர்களும் புகழ்ந்து விரும்புகிறார் என்றும், இதனைக் கொண்டே பெரும் பெரும் சீவன் முக்திகிட்டும் என்பதும், இதனையே திருவடிவம் என்றும் சிவலிங்க வடிவம் என்றும் கூறும் இக்கருத்தினை நன்கு தெளிதற் பொருட்டே கோயில் என்னும் சிதம்பரமாம் புண்ணிய தலத்தில் எழுந்தருளி யிருக்கும் நரமுக விநாயகர் திரு

உருவினையும் எமன் உதைபட்டு சரண் அடைந்த திருக் கடவூர் என்னும் புண்ணிய தலத்தில் எழுந்தருளி இருக் கும் நாமுக நந்தியின் திரு உருவினையும் பக்த கோடிகள் நாள் தோறும் தரிசித்து வழிபடுதலாகும். இந்த மனிதப் பிறப்பும் வேண்டுவதே இம்மாநிலத்தே என்று அப்பர் கூறியதின் கருத்தென்ன? நாற்ற உடம்பென வேற் றுமை கற்பித்தழியவா? ஒற்றுமை நயங்காண ஒல்லார் சொல்லால் உலகம் எவ்வளவு தூரம் மாண்டுமடிய நேர் கின்றது. "கூற்றம் குதித்தலும் கூடும் நோற்றலின் ஆற்றல் தலைப்பட்டவர்க்கு" என்பது மறந்தே போய் விட்டது.

செத்தே போனால் சிரியரோ என்ற மணிவாசகர் மணியோசை கூடவா காதில் விழாமல் செவிடர்கள் ஆக வேண்டும். அந்தோ கண்ணிருந்தும் குருடர்களாய் காதிருந்தும் செவிடர்களாய் வீண் வாழ்க்கை வாழ்ந்து மரண பந்தயத்தில் யார் முந்தி என்று ஓடிக்கொண்டிருக் கும் இந்தக் கும்பலை எண்ண எண்ண உள்ளம் குழை கின்றதே.

"நெஞ்சம் பொறுக்குதில்லையே இந்த நிலைகெட்ட மனி தரை நினைந்துவிட்டால், அஞ்சி அஞ்சிச் சாவார் இந்த மரத்தில் என்பார், இந்தக் குளத்தில் என்பார் துஞ்சு வது முகட்டிலென்பார் இவர் அஞ்சாத பொருளில்லை அவனியிலே"

"நாமார்க்கும் குடியல்லோம் நமனை யஞ்சோம்" என்று வாழ்ந்த வாழ்வு இன்று எங்கே போய் ஒழிந்து கொண்டது. "மண் வெட்டிக் கூலி தின்னலாச்சே எங்கள் வாழ் வலியும் தோள் வலியும் போச்சே" எனத் தளர்ந்து ஏங்கும் அழுகைக் குரல் எங்கும் கேட்கிறது. இதனை மாற்றி அருள் சுவடி கற்பித்து உணரச் செய்து

உலகை நல்வழிப் படுத்த உயர்ந்தோர் அருட்கண் திறக்காமலா போய்விடுவார்கள்?

" ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமனில்லை நாணுமே
சென்றே புகுங்கதி யில்லை நும் சித்தத்து
நின்றே நிலைபெற நீர்நினைந்து உய்மினே "

என்று கூறிய திருமூல குருதேவர் பின்னரும் இவ்வுலகில் இவ்வுண்மை நிலை தவறித் தடுமாறித் துயருற்றிருக்கும் நிலையையும்,

" பதிபல வாவது பண்டிவ் வுலகம்
விதிபல செய்து ஒன்றும் மெய்ம்மை உணரார்
துதிபல தோத்திரம் சொல்ல வல்லா ராகும்
மதியிலர் நெஞ்சினுள் வாடுகின்றாரே "

" தீயினும் வெய்யன் புனலினும் தண்ணியன்
ஆயினும் யீசன் அருளறி வாறில்லை
சேயினும் நல்லன் அணியன லன்பர்க்குத்
தாயினும் நல்லன் தாள்சடை யோனே "

கண்ணன் பிறப்பிலிகாண் நந்தியா யுள்ளே
எண்ணெண் திசைதொறும் ஏகாந்த னாயிடும்
திண்ணென் றிருக்கும் சிவநதியாய் நிற்கும்
நண்ணும் பதமிது நாடவல்லார்க்கே

என்றும்

" பற்றற்றவர் பற்றி நின்ற பரம்பொருள்
கற்றற்றவர் கற்றுக் கருதிய கண்ணுதல்

என்றும் அவர் எடுத்துக் கூறியதின் கருத்தை புலனாகாது பலர் பல பாடங்களோடு இவைகளையும் ஒப்ப நோக்கி உழன்று தடுமாறுகின்றனர்.

அறிவிக்க வேண்டாம். அறிவிற் செலுவோர்க்கும் அறிவிக்க வேண்டாம் அறிவற்றவர் வோர்க்கும் என்று உணர்த்தி அதிபக்குவர்க்கே உணர்த்த என்றும் உபதேச முறையை எடுத்துக் கூறி "விண்ணிடி விழும் வெளி விட்டவர்க்கு" என்று அதற்கு வரம்பு கட்டியதை யும் சிறிதும் எண்ணாது பாட்டைக் கெடுத்தான் படிப் பாளி ஏட்டைக் கெடுத்தான் எழுத்தாளன் என்ற வழி யில் அறையறை யன்ன கயவர் தாமகேட்ட மெய்ப் பொருளைப்பிறர்க்கு எடுத்துரைத்தலால் என்று திருவள் ளுவர் கூறியபடிக்கும் கையாடிப் போட்டியிட்டுப் பயின் றும் அப் பயிற்சியின் நெறியும் முறையும் அறியாது இல்லாத் துறைகளில் அப் பயிற்சிக்குப் பரிசுகள் அளிப்பதும் பெறுவதும், பெரும் ஆரவார ஆடம்பரச் செயல்களேயாம்.

இதைக் காணுங்கால் மெய்யருட் கல்வி, கேள்வி முறைகள் எவ்வுளவு மறைந்தொழிந்து போயின என் பதையே விளக்குகின்றன. இத்துணைக் கல்வி கேள்வி கட்கு அதிகாரிகள் யார் என்றும் இவைகளை உணர்த்து முறை உணர்த்திக் கூறுதற்கு உரிமை யுடையார் யார் என்றும் எண்ணாது ஓர் வரம்பின்றி நிகழும் நிகழ்ச்சிகளெல்லாம் வெறும் பயனற்றவையே யாம். என்க. அருளைப் புரிதற்குத் தாம் இன்பக் கலவியில் இட்டெழுகின்றதோர் அன்பை விளைக்கும் ஆல், அரசு, அத்தி எனும், சமித்தைகளாம் உயிர் நிலை நாடிகளைக் கொண்டு கூட்டி எழுப்பும் ஓமத்தால் விதி வழி நிலவும் இயலுரு மாறி Spiritual change and transformation of the natural physical body disintegrating through the way of fate or pretestimation அருளார் ஆக்கைய ராக அமலம் பெற்று attaining the spiritual transfiguration through the 'way of love and grace indiss-

pensable to higher resurruction அங்கு இங்கு எனாதபடி எங்கும் தாமாகி நின்று நல்லுயிர் உய்தலே சிவன் முத்தியாகும். உய்யும் வகையால், உணர்வினுல் ஏத்துமின் என்றபடி எங்கும் நிறைந்து அப்பாலைக் கப்பாலாயுள்ள பெருங் கருணை வள்ளற்பிரானை அவர் பொருந்தி யிருக்கும். நித்திய கல்யாண குணங்களையும் குறிகளையும் நிலைகளையும் அடைய வைக்கலாம். விரித்துரைக்கும் விதங்களால் போற்றித் துதித்து வழிபட்டு வந்து, மெய்யினைப் பற்றி நின்று, உய்யும் பொருட்டாகவே என்று தெளிக. முழுமுதற் பொருளாகிய கடவுள் தந்தையே யாயினும், தாயும் ஆனவர் என்றும் குமரனும் ஆனவர். என்றும், ஆள் கடலில் ஆலிலையில் பள்ளி கொண்டிருக்கும் நாராயணனும், விஷ்ணுவாம் சற்குருநாதனையும் கூறியுள்ளதை நல்லுயிர்கள் உற்று நோக்கி உய்த்துணர்ந்து தெளிக. இது பயனறிந்து இவ்வழி எண்ணுமளவில் அயன் நெடுமால் நமக்கு அன்னியமில்லை.

நயனங்கண் மூன்றுடைய நந்தி தமர் நாம்
வயன் பெறுவீர் வானவராகில்

என்றுள்ள திருமந்திரத்தாலும் மெய்விடா நாவுள்ளம் மெய்யருள் இருந்து நீ மெய்யானார் என்றுள்ள திருமூல வர்க்க மெஞ்ஞான குரு பரம்பரை வந்துள்ள தாயுமானவர் அருட் பாடலாலும் இனிது தெளிதல் கூடும். கடவுளாம் நம்முடல் உயிர்த் தலைவனைக் கண்டு கூடற்கு ஏதுவாயுள்ள யந்திரமாம் நம் உடலில் தந்திரமாம் மெஞ்ஞான மூல மந்திர உபதேசத்தால் உறுதி பெற்று சுதந்திரமாகி, உய்த்தெழும் வகையே பல்வேறு சமயங்களின் முடிவாகிய மோனத்தின் வைப்பும் வரிசையுமாம். நெடுங்காலமாக இவை மறைந்தொழிந்தன. ஆதலின் பல்வேறு பட்டு. நிலை தவறி உழலும் பற்பல சார்பினர்கள் புண்டை நாள் மறை கூறினர். தத்தமக்கு தோன்

றிய வாறெல்லாம் பல்வேறு மந்திரங்கள் பயின்றும், பிறருக்கும் கற்பித்து பிறரையும் பயிலச் செய்து அரிய பெரிய இம் மானிட யந்திரமாம் உடல் நிலை தடுமாறி சுதந்தரம் இழந்து மந்திரம் ஒழிந்து அழிந்தனர் அனேகர். இதற்கு காரணம் ஞான மடங்களென்னும் பல்வேறு ஸ்தாபனங்கள் இப்போது ஆடம்பர ஆரவார அதிகாரச் செருக்குகள் மேலிட்டு இடறும் இன்னலும் சூழ்ந்து தொடர்ந்து மோனமாம் உயர்பதவி இழந்து யீனமாம் பெரும் பறையறையும் வெறும் பகட்டு படாடோய பிதற்றுத் துறைகளாக மாறி உழல்வதேயாம்.

காரிருளில், கருங்கடலில், கையில்லா முடவன் நீந்தி அக்கரை சேர்ந்ததற்கொப்பாம். நல்லுயிர்கள் இவ்வரிய மானிடப் பிறவி பெறுதல் என்று மெய்ஞானப் பெரு நூல்கள் அனைத்தும் ஒப்ப முழக்கமிடுவதும், மெய்யின்ப அருள் நிலையில் உடல் உயிர் உலகநாதனும் நம் அம்மையப்பர் அழியாத் திருநாமங் கொண்டு அங்கிங்கெனாதபடி எங்கும் தாமாகி மிளிர்கின்ற உண்மைதனை எத்தனை இனிமையாகத் திருமந்திரம் கூறுகிறது.

நாடவல்லார்க்கு நமனில்லை நாளில்லை
நாடவல்லார்கள் நரபதியாய் நிற்பர்
தேடவல்லார்கள் தெளிந்த பொருளிது
கூடவல்லார்க்கே இது கூறலுமாமே:

என்றபடியாய் அத்தகைப் பெரும் பொருளை எத்துணைக் கருணையுடன் மானிடமக்கட்கு வெளியாக்கியுள்ளனர் என்பதை ஓர் சிறிதும் உற்று நோக்காது, உய்த்துணராது, உணரவும் முயலாது கூடிக் கிட்டுதற்கு இன்றியமையாத உடைமையாம் இவ்வரிய உடம்பின் உரிமையும் அறியாது இழந்து விழுந்து கிடப்பதென்றால், இதை என்னென்று எடுத்துக் கூறுவது. அம்மம்மா! நினைக்கினும் நெஞ்சம் கலங்குகிறதல்லவா? (பசுக்கள் பல்வண

ணம், பால் ஒரு வண்ணம்) என்றும், எவ்வுயிரும் பராபரன் சன்னதியேயாகும். இலங்கும் உடலுயிர் அனைத்தும் ஈசன் கோயில் என்றும், பல்வேறு பசுக்கள் அனைத்திலும் நர பசுக்கள் தான் சிறந்ததென்றும், அவைகளைத் தேவாதி தேவர்களும் போற்றுவர் என்று இருடிகளும் சித்தர்களும் பெரு முழக்கஞ் செய்திருக்க, மானிட மக்கள் அது மறந்து தம்மை வஞ்சித்தும், தம்மினத்தாராற் பிறரை வஞ்சித்தும் பல்வேறு சிறு பசுக் கூட்டங்களைப் போல உழன்று ஊனுடம்பை உணர்த்தும் ஆலயங்களும், உள்ளுடம்பை உணர்த்தும் கோயில்களும் தாமே யாம் என்று அறியாது, எண்ணில கோயில்கள் கட்டுவித்தும் அவைகட்கு எண்ணில தியாகங்கள் செய்கின்றனர்.

பஞ்சமும் பாவமும் நிறைந்து மானிட மக்கள் தம் நிலை தடுமாறிய இக்கொடிய காலத்தில் அவர்கள் மெலிந்து நோயுற்று வைத்தியசாலைகளை நாடி சிகிச்சைகளைச் செய்துகொண்டு உழல்வது கண்டும், மேலும்-மேலும் மாடமாளிகைகளையும் கூடகோபுரங்களையும் வளர்ப்பதிலா இந்த நாடு செழிப்புறும்.

மாடத்துளான் அலன்; மண்டபத்துளான் அலன்; கூடத்துளான் அலன்; கோயில் உள்ளான் அலன் என்று திருமந்திரம் கூறியதையும்,

கோவிலாவ தேதடா குளங்களாவ தேதடா
கோவிலும் உம்முளே குளங்களும் உம்முளே

என்று உண்மையும் உபாயமும் நன்குணர்த்தியதையும் கண்டு தெளிக.

முன்னைப் பிறப்பும் இறப்பும் அறியாதார்
அன்பில் அவனையாம் அறியோம் என்பர்

இன்பப் பிறப்பும் இறப்பும் இலாநந்தி
அன்பில் அவனை அறியகிலாரே.

என்று திருமந்திரம் கூறியவண்ணம் மக்கள் மயங்கி நின்று பின்னர் தெளிந்து,

முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்
பின்னும் அவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சி ஆனாள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தை
தன்னை மறந்தாள் தன்னாமம் கெட்டாள்
தலைப்பட்டாள் தலைவன் தாளே.

என்று தேவாரம் கூறியபடிக்கும்,

கருவாய்க் கிடந்துன் கழலே நினையும் கருத்துடையேன்
உருவாய்த் திரிந்து உந்தன் நாமம் பயின்றேன்
திருவாய் பொலிக சிவாய நமவென்று நீறணிந்தேன்
தருவாய் சிவகதி நீ திருப்பா திருப்புலி யூருளானே.

நிற்கின்ற போதே நிலையுடையான் கழல்
கற்கின்ற செய்மின் கழிதரும் பாவங்கள்
சொற்குன்ற லின்றித் தொழுமின் தொழுதால்
மற்றொன்றி லாத மணிவிளக் காமே.

என்றபடி பேரின்பப் பெருவாழ்வு நிகழ்வதாகும். உடலுயிர்கள் சார்ந்தவண்ணம் இருப்பதும் சார்ந்தவண்ணம் ஆவதும் இயற்கை. ஆகையால் அவைகள் விதி வழியாம் பொறிவழிப்பட்டு தம் உயிரின் நிலையறியாதும் உயிரின் ஒடுக்கமாம் உணர்வினை யறியாதும் உணர்வின் பெருமையனும் கடவுள் எனும் சொல்லும் அச் சொல்லின் பொருளும் நாடித் தேடி, கண்டு கூட முயல்வதின்றாம். ஆகவே (காற்றுள்ள போதே தூற்றிக்கொள்.) என்றபடி,

உடல், பொருள், ஆவி உலகத்தார் கொண்டு
படர்வினை பற்றறப் பார்த்துக்கை வைத்து
கொடியின்டி வைத்து நுண்ணுணர் வார்க்கிக்
கடிய பிறப்பறக் காட்டினன் நந்தியே

என்ற திருமந்திரத்தை உற்று நோக்கி உண்மை தெளி தலே இவ்வரிய மானிடப் பிறப்பால் வரும் பெரும் பய னும். இப்பயனை இழந்து போதற்கு ஏதுவாம் பிற வழி களில் உழன்று மீண்டும் பிறந்து இறப்பதற்கே காரண மாய் இருந்து இறப்பதென்றால் உடலிருந்தும், உயிரி ருந்தும் பொருளிருந்தும் அனைத்தும் இல்லாதவரே யாம். தன்னை அறிவதே அறிவாகும் பின்னை அறிவெல்லாம் பேயறிவாகுமே என்று மந்திரம் கூறியபடி இப் பொற் பதியாம் உடலறிந்து நிற்கு நிலையே நிலையாகும்.

## 5 முடிவுரை

குருடர்கள் குருடர்கட்கு வழிகாட்டுவது போல போலிப் புலவர்கள் காட்டும் வழியில் சென்று மாட்டிக் கொண்டு மடியாமல் திரு மூலப் பெருந்தகை திருமறை அதைப் பின்பற்றி வளர்ந்தோங்கிய பலவேறு திருமுறை கள் போன்ற பேரருள் நூல்பற்றி உலகம் உய்ய வேண்டும்.

*மதிநுட்பம் நூலோடுடையார்க்கு அதிநுட்பம்*
*யாவுள முன்னிற் பவை.*

என்ற வினாவுக்கு நேர்விடை தரவேண்டுமானால் முப் பொருள் உண்மை உணர்த்தும் மெய்கண்ட நூல் வழி நின்று உய்கண்டங் கொண்டு மெய்கண்டு வாழ்வதே வாழ்வாம் எனக் கூறலாம். இவ்வுயிர் வாழ்க்கைக்கு உரித் தாகும் நூல்களே. திருமறைகள் கூறும அருள் முறை களாம். இவை ஓதுமுறை ஓதி உயர்ந்து ஓதாதுணர்ந்து உள்பொருள் கண்டு தெளிவதே பலசமய உத்தமர்களின் குறிக்கோளாகும். சித்தர் சிவலோகம் இங்கே தெரிசித் தோர் என்ற திருமந்திரமும் பாடிய பாட்டின் பொருள் உணர்ந்து கூறுவார். இருப்பர் சிவலோகத்தில் என்றும் எடுத்துக் காட்டிய திருவாசகமும் இவை போன்ற பல் வேறு அருள் வாக்குகளும் பலதுறைகளில் மலிந்து கிடக்கும் வெறும் கல்விப் பொருளல்ல பெருங்கல்விப் பொருள்களாம். அருட்செல்வம் என்க. திருவள்ளுவர்

கூறியபடி இருள் சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள் எனக்கு இதனை சாதாரண கல்வித் துறைகளில்
சாமான்ய பொருளைப் போல் பொருள்படுத்த முடியாது.

உலகம் மாயை என்றும் உடம்பும் பயனற்ற
தென்றும் பிதற்றுவார் கூற்று உலகத்தை தீய நெறி
யில் செலுத்திக் கெடுக்கவல்லது. உலகம் போல்
அழகியவர் கடவுள். அவ்விரண்டையும் துய்க்க
வல்லது. உயிர், பதியினைப் போல் பசுபாசம்
அறுதி என்ற உபதேசம் கூர்ந்து உணரத் தக்
கது தான் தெய்வம் என்று இறுமாந்திருப்பார்க்கு நான்
தெய்வம் என்று நமன் வந்திடுவானே என்று எள்ளி
நகையாடுகின்றனர் ஆன்றோர். பிறந்தவரெல்லாம் இறப்
பது உறுதி என்றும் பிதற்றித் திரியும் உலகம், உட
லுயிர், உலகம் நிலையாமை உணர்ந்து விரைந்து நிலை
யானதைச் செய்வதற்கு எல்லாம் நிலையாது என்று
கூறிவிடுவது ஆபத்தானது. எல்லாம் நிலையாத்து என்
றால் எதை நிலைத்தது என்று செய்வது. அழிவே தரும்
பல்வகைத் தவறுகளைக் கூறி உலகையே இன்று அணு
குண்டுகளால் துளைத்து ஒழிக்க முந்தி இருக்கும்
வெறுப்பு நிலை மாற வழிதேடியாக வேண்டும். எல்லா
ரும் இறைவன் உடமைகள் ஒருவரை ஒருவர் அழிப்ப
தும் தானே அழிவதும் இரண்டும் தவறேயாகும்.
வெறுப்பை வெறுப்பாலழிப்பது அரிது. நெருப்பை
நெருப்பாலழிப்பது முடியுமா? நீரால் நெருப்பை அழிப்
பது போல் அதாவது ஆற்றுவதுபோல் அன்பால் ஆற்
றலாம். இதுவே அன்பு மார்க்கம் அன்பு கொடுப்பவ
னையும் பெறுபவனையும் வாழ வைப்பது வெறுப்போ
இருவரையும் சாகவைப்பதே யாகும். சாகாக் கலையே கட
வுள் உணர்த்தும் கலை. இக் கலை கூறும் சாகாக்கால்,
வேகாத்தலை, போகாப்புனல் என்ற இம் மூன்று மாபெ
ரும் பொருள்களை விளக்கும் மோனக்கலையே கலையாகும்.
இதனைச் சொல்லாமல் சொல்லி விளங்க வைக்கும் பெரி
யாரிடம் கேளாமல் கேட்டு மூர்த்தி தலம் தீர்த்தம் இம்
மூன்றையும் முறையே தம்முள் தெளிந்து தேறி இன்ப
நிலை பற்றி அன்புருவம் கொண்டு அருள் பெற்று உய்
வதே இம் மானிடப் பிறப்பாலன்றி வேறெவ் வழியாலும்

எத்துணையாலும் அடைதற் கியலாத அரிய பெரியதோர் சுதந்திரமாகும்.

இதனை முற்றும் மறந்து கைவிட்டு நிற்கின்ற இன்றைய உலகம் இருள் சூழ்ந்து பேராபத்தில் இருக்கின்றது. ஆயினும் முழு மோச நிலை வருமுன்னர் விழிமின்; எழுமின்; தெளிமின்; வம்மின்; இன்ப நூல் பயிலுமின்; துன்ப நிலை அகற்றுமின்: அன்பு நிலை ஏற ஒருப்படுமின்; இத்தருணம் கைவிடன்மின்.

விட்டுவிடப் போகுதுயிர் விட்டுவிட்டால் உயிரைச்
சுட்டுவிடப் போகின்றார் சுற்றத்தார் - பட்டதுபட்
டென்னேரமும் சிவனை ஏத்துங்கள் போற்றுங்கள்
சொன்னேன் அதுவே சுகம்.

என்று பட்டினத்தடிகள் பொருள் இடி முழக்கம் மக்களினத்தார் அனைவரையும் உலுக்கிவிட்டு உய்விக்க வல்லவோ?

மெய்விடா நாவுள்ள மெய்யருளிருந்து நீ
மெய்யான மெய்யை யெல்லாம்
மெய்யென உணர்த்தியது மெய்யிதற் கையமிலை
மெய்யேது மறியா வெறும் 5.
பொய்விடாப் பொய்யினே ருள்ளத் திருந்துதான்
பொய்யான பொய்யை யெல்லாம்
பொய்யென்று வண்ணமே புகலவைத்தா யெனிற்
புன்மையே னென் செய்குவேன்
மைவிடா தொழுநீல கண்ட குருவே
விஷ்ணு வடிவான ஞான குருவே
மலர்மேவி மறையோது நான்முகக் குருவே
மதங்கடொறு நின்ற குருவே
கைவிடா தேயென்ற வன்பருக் கன்பாய்க்
கருத்தினுணர்த்து குருவே
சுந்தரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணைகரக் கடவுளே.




ஓம்

தென்னாடுடைய சிவனே போற்றி
என்னாட்டவர்க்கும் இறைவா போற்றி.

---

## சத்தியதரிசி வெளியீடு



தமிழர் திருமறை .... .... ரூ. 3—4—0
(இங்கிலீஷ் கருத்துடன்)

இகபர இன்ப அனுபவ ஞானம் ரூ. 0—8—0



சத்தியதரிசி நூல் வெளியீடுகள்
கிடைக்குமிடம்:
**சிவ. கா. காசிநாதன் செட்டியார்,**
பள்ளத்தூர்.
இராமநாதபுரம் ஜில்லா.

சௌத் இந்தியா பிரஸ், காரைக்குடி.